அன்பாளன் அருளாளன் அல்லாஹ்வின் பெயரால்....

# இறை மறையின் குறையற்ற பிறை!

தொகுப்பு:

**ஹிஜ்ரா கமிட்டி,**

**இந்தியா**

**இலவச வெளியீடு : 13**

**ஜமாஅத் அல் முஸ்லிமீன்**

பேபி வாட்ச் மாடி

கோட்டார்,

நாகர்கோவில்.

அருளாளன் அன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்

# இறை மறையின் குறையற்ற பிறை!

கண்ணியத்திற்குரியவர்களே, அஸ்ஸலாமு அலைக்கும்,

இன்னும் முற்றிலும் சத்தியத்தைக் கொண்டே நாம் இதனை (குர்ஆனை) இறக்கி வைத்தோம். மேலும் முற்றிலும் சத்தியத்தைக் கொண்டே இது இறங்கியது. (17:105) இன்னும் சத்தியம் வந்தது. அசத்தியம் அழிந்தது, நிச்சயம் அசத்தியம் அழிந்தே தீரும் என்று கூறுவீராக! (17:81) (மாதங்களை) முன்னும் பின்னும் ஆக்குவதெல்லாம் நிராகரிப்பை அதிகப்படுத்துவதாகும். (9:37)

அகிலங்களைப் படைத்து பரிபாலிக்கும் அல்லாஹ்வின் ஆணித்தரமான வாக்குகள் இவை. 1431 வருடங்களாக இவ்வுண்மை இன்று வரையும் நடைமுறையில் இருப்பதை மனித சமூகம் சாட்சி பகர்ந்து கொண்டிருக்கிறது.

அல்குர்ஆனில் அருளப்பட்டிருக்கும் அறிவுரைகள், அறவுரைகள், அறிவியல் தகவல்கள், இம்மை மறுமைச் செய்திகள் எல்லாம் முக்காலத்திற்கும் பொருந்தும் ஆன்மீகக் கருவூலங்கள் ஆகும். மாற்றமோ, ஏமாற்றமோ ஏற்படுத்தாத குற்றமற்ற சட்ட திட்டங்கள் இவை. இவற்றையெல்லாம் ஐயந்தெளிந்து முற்றும் உணர்ந்து கற்றும் உணர்த்தி வெற்றி வாகை சூடியவர்கள் யார்? ஒரு தனி நபரோ அல்லது ஓர் இயக்கமோ யாரும் இதில் முழுமை பெற முடியாது. மனிதனின் ஐம்புலனுக்குள் நின்று கொண்டு ஏக வல்லோனின் வாக்குகளுக்கு வாதாடி விளக்கமளித்து விட முடியாது. 17:85 அல்குர்ஆனின் தீர்ப்பு அல்லாஹுவின் உறுதியான இறுதித் தீர்ப்பாகும். உலகத்தின் நாடுகளுக்கோ, அரசுகளுக்கோ, விஞ்ஞான விற்பன்னர்களுக்கோ, பெரும்பான்மை பலத்திற்கோ, பணபலத்திற்கோ அல்லாஹ்வின் தீர்ப்பை மாற்றியமைக்க எந்த தகுதியுமில்லை. அந்தப் பேரறிவின் சில துளிகளைப் பெற்றுக்கொண்ட இவ்வுலகச் சிற்றறிஞர்கள் நாங்களும் பட்டம் பெற்றவர்களே என்று சட்டம் பேச அவர்களுக்கும் அற்ப மகிழ்வுண்டு என்பதை "ஒவ்வொரு பிரிவினரும் தம்மிடம் இருப்பதைக் கொண்டே மகிழ்ச்சி அடைபவர்களாக இருக்கின்றனர்" 23:53, 30:32 என்ற இரு திருவசனங்களும் பறைசாற்றுகின்றன.

திருமறை கூறும் குறையில்லா பிறைபற்றியும் எண்ணிலா முரண்பாடுகள் மக்கள் மத்தியில் நிலவுகின்றன. முஸ்லிம்களின் சந்திரன் பற்றிய நிலையிலா நிலைபாடுகளின் சில அம்சங்களை இச்சிறு பிரசுரத்தில் அறிய விரும்பும் ஆர்வலர்களுக்கு அறியத் தருகிறோம்.

**எத்தனை எத்தனை கேள்விகள்?**

1. நபி(ஸல்) ஒவ்வொரு மாதமும் முதல் பிறையைப் பார்த்தார்களா? அல்லது ரமழான், ஷவ்வால், துல்ஹஜ் மாதங்களின் பிறைகளை மட்டும்தான் பார்த்தார்களா? தாம் முதல் பிறை பார்த்ததாக நபி(ஸல்) எப்போதாவது அறிவித்தார்களா?

2. முதல் பிறையைப் பார்த்துத் தகவல் தருவதற்கு ஒரு குழுவை நபி(ஸல்) நியமித்தார்களா?

3. நபி(ஸல்) தினமும் பிறையைப் பார்த்து வந்தார்களா? அல்லது ஒவ்வொரு மாதத்தில் 29ஆம் நாள் பிறையை மட்டும்தான் பார்த்து வந்தார்களா?

4. பிறையை கிழக்கு திசையில் பார்க்க வேண்டுமா? அல்லது மேற்கு திசையிலா? பிறையை எந்தத் திசையில் பார்க்குமாறு நபி(ஸல்) கற்றுக் கொடுத்தார்கள்? அதாவது உதயமாகும் பிறையைப் பார்க்குமாறு நபி(ஸல்) கூறினார்களா? அல்லது அஸ்தமிக்கும் பிறையைப் பார்க்குமாறு நபி(ஸல்) கற்றுக் கொடுத்தார்களா?

5. பிறையை யாரேனும் பார்த்தால் அதை எங்களிடம் தெரிவித்து விடுங்கள் என நபி(ஸல்) எப்போதாவது கூறினார்களா? அப்படியில்லையென்றால் இன்று அவ்வாறு நாம் கூறலாமா?

6. நீங்கள் பிறை பார்த்தால் அதை பிறருக்கு அறிவியுங்கள் என நபி(ஸல்) எப்போதாவது கூறினார்களா? அப்படியில்லையென்றால் இன்று அவ்வாறு பிறருக்குக் கூறுமாறு வலியுறுத்தலாமா?

7. ஷஃபான் அல்லது ரமழான் மாதங்களில் ஒரு நாளை 29 என முடிவு செய்து பிறை பார்க்க முயற்சிக்கிறார்கள். அன்றைய நாள்தான் மாதத்தின் 29ஆம் நாள் என்பதை எவ்வாறு முடிவு செய்கிறார்கள்?

8. ஒவ்வொரு வருடமும் ரமழான், ஷவ்வால் மற்றும் துல்ஹஜ் மாதங்களுக்கு மட்டும் பிறையைப் பாருங்கள் என நபி(ஸல்) கூறினார்களா?

9. ஒரு கிழமைக்கு மூன்று தேதிகள் மற்றும் மூன்று கிழமை களுக்கு ஒரு தேதி வரும் என நபி(ஸல்) கூறினார்களா? அதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?

10. ஆறு மாதங்கள் தொடர்ந்து பகலாகவும் ஆறு மாதங்கள் தொடர்ந்து இரவாகவும் இருக்கும் தென்-வட துருவப் பிரதேசங்களில் வசிப்பவர்களின் நிலை என்ன? அவர்கள் பிறை பார்த்துத்தான் ஒவ்வொரு ரமழானிலும் நோன்பைத் தொடங்க வேண்டுமா? இதற்கு என்ன தீர்வைத் தந்திருக்கிறார்கள்?

11. இந்த நாளில் சூரியன் மறைவதற்கு முன்னதாகவே சந்திரன் மறைந்துவிடும் என விஞ்ஞானம் கூறும்போது, அன்று ஒருவர் பிறைபார்த்ததாகக் கூறினால் விஞ்ஞானத்தை அடிப்படையாக வைத்து அச்செய்தியை மறுப்பவர்கள் சூரியன் மறைந்த பிறகும் சந்திரன் இருக்கிறது என விஞ்ஞானம் சொல்லும் போது மட்டும் ஏன் ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள்.

12. 29ஆம் நாளன்று மேற்கு திசையில் மஃரிப் தொழுகைக்குப் பின்னர் தான் பிறையைப் பார்க்க வேண்டும் என நபி(ஸல்) கற்றுக் கொடுத்தார்களா? இதற்கு ஆதாரம்தான் என்ன?

13. முன்கூட்டியே ஆண்டுகளின் கணக்கை துல்லியமாகக் கூறும் நாள்காட்டியை இஸ்லாமிய அடிப்படையில் தரமுடியாது என கூற வருகிறீர்களா? நாம் பிறையைப் பார்க்காமல் அல்லது கணக்கிடாமல் இருந்தால் மாதம் துவங்காமல் இருந்துவிடுமா என்ன?

14. இன்று தகவல் அடிப்படையில் செயல்படுபவர்கள் நபி(ஸல்) அவர்களின் வழிகாட்டுதலின்படி பிறைத் தகவல் வந்தால் அதற்கு இறை நம்பிக்கையாளர்களில் இரண்டு சாட்சிகளை முன்னிறுத்தி அறிவிக்கிறார்களா? அல்லது இனம் காணா நபர்களின் அறிவிப்புகளை ஏற்றுக்கொண்டு செயல்படுத்து கிறார்களா? இது வரை பிறை பார்த்த நபர்களின் விபரங்கள் அறிவிக்கப்பட்டுள்ளனவா?

15. பிறையைக் கண்ணால் கண்டுதான் மாதத்தைத் துவங்க வேண்டும் என்போர் முன்கூட்டியே காலண்டர் அச்சிட்டு விற்பனை செய்வது நபிவழியாகுமா?

**எத்தனை எத்தனை சாரார்?**

1. பிறையைப் புறக்கண்ணால் கண்டால் அதற்கு அடுத்த நாள் மாதத்தின் முதல் நாள் என ஒரு சாரார் மாதங்களை ஆரம்பிக்கிறார்கள்.

2. பிறையை 29ம் நாள் புறக்கண்ணால் பார்க்க வேண்டும். அது தெரியவில்லை என்றால் மாதத்தை 30 நாள்களாக பூர்த்தி செய்ய வேண்டும் என ஒரு சாரார் கூறுகிறார்கள்.

3. ஓர் ஊரில் புறக்கண்ணால் பிறை பார்க்கப்பட்டால் அதை அந்த ஊர்வாசிகள் மட்டுமே எடுத்துக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் எடுத்துக் கொள்ளக் கூடாது என ஒரு சாரார் கூறுகிறார்கள்.

4. ஓர் ஊரில் பிறை பார்க்கப்பட்டால் அங்கிருந்து குறிப்பிட்ட கி.மீ. தூரத்தில் இருக்கும் மக்கள் மட்டும் அந்தத் தகவலை எடுத்துக் கொள்ளலாம் என ஒருசாரார்.

5. சூரியன் மறைந்த பின்னர் சில நிமிடங்கள் கழித்து பிறை மறைந்தால் அது கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அதை எடுத்துக் கொள்ளலாம் என மற்றொரு சாரார் கூறுகின்றார்.

6. மக்கா நகரில் சூரிய அஸ்தமனத்திற்குப் பின்பு சந்திரன் அஸ்தமித்து அது கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அதை எடுத்துக் கொள்ளலாம் என்று ஒரு சாரார் கூறுகின்றனர்.

7. சூரியன் சந்திரன் பூமி நேர்க்கோட்டிற்கு வரும் நிகழ்வு (The Geocentric Conjunction occours before sunset) சவூதி அரேபியாவின் சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு சில நிமிடங்கள் தாமதமாக சந்திர அஸ்தமனம் (The Moon sets after the Sun) ஏற்பட்டால் அதற்கு அடுத்த நாள் சந்திர மாதத்தின் முதல் நாள் என ஒரு சாரார் கூறுகிறார்கள்.

8. சவூதி அரேபியா என்று ரமழான் மற்றும் ஹஜ் அறிவிக்கிறதோ அன்றுதான் உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் ரமழான் மற்றும் ஹஜ் என கூறுகிறார்கள் ஒரு சாரார்

9. சந்திரனின் தேய்ந்து வளரும் நிலைகளை அறிந்து மாதங்களை கணக்கிட வேண்டும் என ஒரு சாரார் கூறுகிறார்கள்.

10. தங்கள் நாட்டில் பஃஜ்ர் தொழுகைக்கு முன்பு சூரியன்-சந்திரன்-பூமி நேர்கோட்டில் வரும் நிகழ்வு அல்லது அமாவாசை (Geocentric Conjunction occurs before Dawn) நிகழ்ந்தால் அந்த நாளை மாதத்தின் முதல் நாள் என முடிவு செய்ய வேண்டும் எனக் கூறுகிறார்கள் ஒரு சாரார்.

11. இப்படி பல்வேறு கருத்துக்கள் உள்ளவர்களுக்கு இடையில் விசிபிலிட்டி க்ரைடீரியா என்னும் ஒரு பிரிவும் தற்போது உருவாகி இணையதளங்களில் வருகிறது. இவர்கள் புறக்கண்ணால் பிறையைப் பார்ப்பவர்களும் அல்லர், முறையாகக் கணக்கிடுபவர் களும் அல்லர், கண்ணால் பார்ப்பதற்கான வாய்ப்பு இருக்கும் இடங்களை பதிவு செய்து அறிவிப்பவர்கள், ஒவ்வொரு மாதமும் அதை ஏற்றுக் கொள்ளவோ ஏற்றுக் கொள்ளுமாறு மக்களை ஏவவோ மறுக்கிறார்கள். சுருக்கமாகச் சொன்னால் ஒரு சரியான தீர்வை இவர்கள் சொல்வதில்லை.

இத்தனை கருத்து வேறுபாடுகளின் நடுவில் கொள்கை குளறுபடிகளின் நடுவில் தானைத் தலைவர்களின் தடாலடி ஃபத்வாக்களின் நடுவில் தயக்கமில்லாமல் நடுக்கமில்லாமல் அல்லாஹ்வின் தீர்ப்பைத் தேடி ஆழமாகச் சிந்திக்க கடமைப்பட்டுள்ளோம். பிறையைப் பற்றிய நிறையைத் தேடுவதில் கருணையுள்ள ரஹ்மான் நமக்கு வழிகாட்டியிருப்பதை அறிந்து உணர்ந்து, அறிவித்து உணர்த்தி செயல்படுவோமாக.

## 1. ஹிஜ்ரி 1431 ரமழானுடைய முதல் பிறை என்றைய தினம் எதனடிப்படையில்?

அல்லாஹ் தன் திருமறையில் 2:189 வசனத்தில் பிறைகளை பற்றி கூறும்போது இது மனித சமுதாயத்திற்கு நாள்காட்டியாக இருப்பதாக கூறுகின்றான். அத்துடன் 10:5 வசனத்தில் சந்திரனுக்கு மாறி மாறி வரும் படித்தரங்களை விதித்திருப்பதே பல வருடங்களின் கணக்கை அறிந்து கொள்வதற்காகத்தான் என கூறுகின்றான். இந்த அடிப்படையில் ஹிஜ்ரி 1431 வருடத்துடைய ரமழான் மாதம் புதன்கிழமை (11.08.2010) துவங்குகிறது.

இதற்கு சான்றாக 1431 ரமழான் மாதத்திற்கு முந்தைய மாதமான ஷஃபானுடைய மாதம் 30 நாட்களை கொண்டதாக உள்ளது. அதில் நாம் கண்களால் எண்ணிக்கொள்ளும் நிலையை கொண்ட சந்திரனின் படித்தரங்கள் எண்ணிக்கை 29 ஆக உள்ளது. அதாவது ஷஃபான் மாதம் திங்கட்கிழமை (12.07.2010) துவங்குகிறது. அன்று முதல் தேதிக்குரிய பிறையை நாம் கண்களால் மேற்கு பகுதியில் பார்க்க முடியும்.

அதேபோல் ஷஃபான் மாதத்தின் 29வது நாள் திங்கட்கிழமை (09.08.2010) ஆகும். அன்றைய தினத்தின் பிறையையும் நாம் கிழக்கு பகுதியில் கண்களால் பார்க்க முடியும். ஆக மொத்தம் ஷஃபான் மாதம் 29 பிறைகளை நாம் கண்களால் காணும் நிலை உள்ளது. 29வது நாளுடைய பிறையை நாம் கிழக்கு பகுதியில் பார்க்க முடிவதால் அன்றைய தினம் சந்திரனுடைய சுற்று முடிவடையாமல் இன்னும் ஒரு நாள் மீதம் உள்ளதை நாம் அறிய முடிகிறது.

எனவே அதற்கு அடுத்த நாள் செவ்வாய் கிழமை (10.8.2010) ஷஃபான் மாதத்தின் முப்பதாவது நாளாக எண்ணிக் கொள்ள நமக்கு நபி(ஸல்) அவர்கள் கற்றுத் தந்துள்ளார்கள். வான இயற்பியல் கணக்கின்படியும் அன்றைய தினம் தான் சூரியன் சந்திரன் பூமி நேர்கோட்டிற்கு வந்து 1431 ஷஃபான் மாதத்தின் சுழற்சியை முடித்து 1431 ரமழான் மாதத்திற்கான சுழற்சியை துவங்குகிறது என்பது ஆதாரப்பூர்வமான யாரும் மறுக்க முடியாத உண்மையாக உள்ளது. The Astronomical New Moon is on August 10,2010 (Tuesday) at 3.08 UT.

எனவே உலக மக்கள் அனைவரும் ஹிஜ்ரி 1431 ரமழான் மாதத்தை புதன்கிழமை (11.08.2010) அன்று துவங்கும்படி இந்திய ஹிஜ்ரா கமிட்டி உங்களை அல்லாஹ்வின் மார்க்கத்தில் குழப்பங்களே இல்லை என்பதை தெளிவுபடுத்தி கேட்டுக் கொள்கிறது.

**உ. மஃரிபில் பார்க்கப்படும் பிறை என்றைய தினத்தின் பிறை ?**

ஒரு நாள் என்பது எந்த நேரத்திலிருந்து ஆரம்பித்து எந்த நேரத்தில் முடிகிறது என்பதை நாம் ஆய்வு செய்தால் தான் மஃரிபில் பார்க்கப்படும் பிறை என்றைய தினத்தின் பிறை என்பதை அறிய முடியும்.

தற்போது உலகில் கிருஸ்தவர்கள் இரவு 12 மணிக்கு தேதியை மாற்றி நாளை ஆரம்பிக்கிறார்கள்.

யூதர்கள் சூரிய அஸ்தமனத்தில் இருந்து தேதியை மாற்றி நாளை ஆரம்பித்து வருகிறார்கள்.

ஆனால் முஸ்லிம்களோ இதுவரை யூதர்கள் பின்பற்றி வரும் அடிப்படையிலேயே தங்களுடைய நாட்களும் ஆரம்பிக்கிறது. இது தான் இஸ்லாமிய அடிப்படை என நினைத்து வாழ்ந்து வருவதை பார்த்து வருகிறோம்.

நமக்கு, இஸ்லாம் நாளின் அளவுகோலை அறிந்து கொள்ள அறிவு ரீதியான, வணக்க வழிபாடுகள் ரீதியான பல ஆதாரங்களை தந்துள்ளது. அவைகளை நாம் சிறிது சிந்தித்தாலே நாம் நாளை எங்கிருந்து துவங்க வேண்டும், மஃரிபில் பார்க்கப்படும் பிறை எந்த தினத்தின் பிறை என்பதும் இதன் மூலம் தெளிவாகிவிடும்.

திருகுர்ஆனின் வசனம் 36:40ல் இரவு பகலை முந்த முடியாது என்று கூறுகிறது. இதை நாம் சிந்தித்தால் பகலுக்கு பின் இரவு என்பது தெளிவாகும்.

அதேபோல் 89:1-5 வசனங்களில் அதிகாலையின் மீது சத்தியமாக என ஆரம்பித்து செல்கின்ற இரவின் மீது சத்தியமாக என அல்லாஹ் கூறுவதே காலையை தொடர்ந்து செல்கின்ற இரவு என்பது பகலுக்கு பின் இரவு என்பது தெளிவாகும்.

அது போல் ஏராளமான வசனங்கள் உள்ளன. இன்னும் காலையிலும் மாலையிலும் உங்கள் இறைவனை துதிப்பீராக என்ற வசனங்கள் பகலுக்குப்பின் தான் இரவு என்பது மீண்டும் தெளிவாகிறது.

وَسَبِّحُوهُ بُكْرَةً وَأَصِيلًا

இன்னும் காலையிலும் மாலையிலும் அவனைத் துதி செய்யுங்கள். 33:42

لِّتُؤْمِنُوا بِاللَّهِ وَرَسُولِهِ وَتُعَزِّرُوهُ وَتُوَقِّرُوهُ وَتُسَبِّحُوهُ بُكْرَةً وَأَصِيلًا

(ஆகவே முஃமின்களே!) நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் ஈமான் கொண்டு அவனுக்கு (சன்

மார்க்கத்தில்) உதவி அவனைச் சங்கை செய்து காலையிலும் மாலையிலும் அவனைத் துதி செய்து வருவதற்காகவே தூதரை அனுப்பினோம். (48:9)

فَخَرَجَ عَلَىٰ قَوْمِهِ مِنَ الْمِحْرَابِ فَأَوْحَىٰ إِلَيْهِمْ أَن سَبِّحُوا بُكْرَةً وَعَشِيًّا

ஆகவே அவர் மிஹ்ராபை (தொழும் இடம்) விட்டு வெளியே தம் சமூகத்தாரிடம் வந்தார்; பின்னர் அவர்களிடம் (பேச முடியாத நிலையில் சயிக்கினையாக) அவர் காலையிலும் மாலையிலும் (அல்லாஹ்வைத் துதித்து) தஸ்பீஹ் செய்யுங்கள் என்று உணர்த்தினார். (19:11)

மேற்கண்ட வசனங்கள் அனைத்தும் ஒரு நாளில் காலையிலும் மாலையிலும் இறைவனை வணங்குவதற்கு சொல்லப்பட்டதாகும். இந்த அடிப்படையில் தான் நமது ஐவேளை தொழுகைகள் அமைக்கப்பட்டுள்ளன. எனவே மேற்கண்ட வசனங்களை உறுதி செய்யும் வகையில் காலையிலும் மாலையிலும் ஐவேளை தொழுகைகளை கீழ்கண்ட ஹதீஸின் அடிப்படையில் தொழுது வருகிறோம்.

புகாரி ஹதீஸ் எண். 46ல் பகலிலும் இரவிலும் ஐவேளை தொழுகைகள் இருக்கின்றன என நபி(ஸல்) அவர்கள் கூறியது பகலுக்கு பின் இரவு என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் நமக்கு தெளிவாக்குகின்றது.

**இஃதிகாப்–**

மேலும் புகாரி ஹதீஸ் எண் 2033ல் நபி(ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுகையை முடித்துவிட்டு இஃதிகாப் என்னும் வணக்கத்தை ஆரம்பிப்பார்கள் என்பது பகலுக்கு பின் இரவு என்பதற்கு தெளிவான ஒரு சாட்சியாக உள்ளது. கடைசி 10 நாள் இஃதிகாப் இருப்பது நபி வழி. சரியாக 10 நாட்களை முன்கூட்டியே கணக்கிட்டால் தான் இருக்க முடியும் என்பதையும் நாம் சிந்திக்க கடமைப்பட்டுள்ளோம்.

لَا يَسْمَعُونَ فِيهَا لَغْوًا إِلَّا سَلَامًا وَلَهُمْ رِزْقُهُمْ فِيهَا بُكْرَةً وَعَشِيًّا

ஸலாம் (சாந்தி) என்பதைச் (செவியுறுவார்களே) தவிர அச்சுவனபதிகளில் அவர்கள் வீணான எதையும் செவியுற

மாட்டார்கள். இன்னும் அங்கே அவர்களுக்குக் காலையிலும் மாலையிலும் அவர்களுடைய உணவு இருக்கிறது. (19:62)

மேலும் நரக நெருப்பின் முன் ஃபிர்அவ்ன் கூட்டம் காலையிலும் மாலையிலும் கொண்டுவரப்படுவார்கள் என்பதில் இருந்தும் பகலுக்கு பின் தான் இரவு வரும் என்பதை புரிந்து கொள்ளலாம். அதைத் தான் கீழ்கண்ட வசனம் தெளிவாக்குகிறது.

النَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا وَعَشِيًّا وَيَوْمَ تَقُومُ السَّاعَةُ أَدْخِلُوا آلَ فِرْعَوْنَ أَشَدَّ الْعَذَابِ

காலையிலும் மாலையிலும் அவர்கள் நரக நெருப்பின் முன் கொண்டுவரப்படுவார்கள். மேலும் நியாயத் தீர்ப்பு காலம் நிலைபெற்றிருக்கும் நாளில் ஃபிர்அவ்னுடைய கூட்டத்தாரைக் கடினமான வேதனையில் புகுத்துங்கள் என்று கூறப்படும்.(40:46)

இவை எல்லாவற்றிற்கும் முத்தாய்ப்பாக அல்லாஹ் தன் திருமறையில் 17:12 வசனத்தில் இரவு பகலும் இரண்டு அத்தாட்சி என கூறிவிட்டு ஆண்டுகளின் எண்ணிக்கையும் கால கணக்கையும் அறிந்து கொள்வதற்காக பகலை பிரகாசமாக்கினோம் என கூறுவது வெளிச்சத்திலிருந்து தான் கணக்கை ஆரம்பிக்க வேண்டும் என்பதை தெளிவுபடுத்துகிறான்.

ஆண்டுகளின் கணக்கை அறிய வேண்டும் என்றாலே ஒரு நாளின் கணக்கை அறிய வேண்டும். அதை வைத்து ஒரு மாதத்தின் கணக்கை அறிய முடியும். அதை கொண்டு வருடங்களின் கணக்கை அறிந்து கொள்ள முடியும் என்பது சிந்திக்கும் மக்களுக்கு தெளிவாக புரிகிற விஷயமே!

எனவே மஃரிபிற்கு பின் பார்க்கப்படும் பிறை எந்த தினத்துடைய பிறை என்பதில் தற்போது நீங்கள் தெளிவடைந்திருப்பீர்கள்.

ஒரு கிழமையுடைய பகலில் எந்த தேதி உள்ளதோ அதே தேதிதான் மஃரிபிற்கு பிறகும் தொடரும் என்பதை நாம் மேற்கண்ட ஆய்வுகள் மூலம் புரிந்து கொள்ளலாம். உதாரணமாக 1431 ரமழான் மாதம் புதன்கிழமை (11.08.2010) துவங்குகிறது.

அது தான் ரமழான் மாதத்தின் முதல் (1) தேதி அன்று நாம் நோன்பு நோற்றவர்களாக மஃரிப் நேரத்தை அடைவோம். அந்த தினத்தில் தான் ரமழான் மாதத்தின் முதல் (1) தேதிக்கான பிறையை கண்ணால் பார்க்கலாம். அந்த 1வது தேதியில் பிடித்த நோன்பை துறந்து அன்றைய கிழமைக்கான மஃரிப் தொழுகை இஷா தொழுகை ஆகியவற்றை தொழுவோம். இன்ஷா அல்லாஹ்.

மேலும் ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண்: 1820ல் நபி(ஸல்) எந்த தினத்தில் பார்க்கிறோமோ அது அன்றைய தினத்தின் பிறை என நபி(ஸல்) கூறிய செய்தியும் அதை நமக்கு மேலும் உறுதிப் படுத்துகிறது. மேலும் ஒரு கிழமை தினம் என்பது காலையும் மாலையும் சேர்ந்தது தான் என்பது மேற்கண்ட வசனங்களில் உள்ள அரபி வார்த்தைகளை கொண்டு மேலோட்டமாக சிந்தித்தாலே விளங்கிவிடும். எனவே எந்த கிழமையில் பிறை மஃஸில் தெரிகிறதோ அது அந்த கிழமைக்குரிய தேதியாகும் என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே மஃரிப் நேரம் என்பது ஒரு குறிப்பிட்ட கிழமைக்குள் தான் என்றுமே இருக்கும்.

## 3. மஃரிபில் பார்க்கும் பிறை உதயமாகும் பிறையா? அஸ்தமனமாகும் பிறையா?

மஃரிப் என்றால் என்ன என்பதை நாம் சிந்தித்தால் இது இலகுவாக புரிந்து விடும். உதிக்கும் திசையை மஷ்ரிக் என்றும் மறையும் திசையை மஃரிப் என்றும் அரபியில் அழைப்பார்கள். உண்மையில் பூமி தன் அச்சில் சுழல்வதால் இந்த கிழக்கு பகுதியில் உதிப்பது போன்றும், மேற்கு பகுதியில் மறைவது போன்றும் நமக்கு தோற்றமளிக்கிறது என்பதுதான் உண்மை. மேலும் பூமி மேற்கிலிருந்து கிழக்காக சுழன்று வருகிறது.

அதனால் தான் வானில் உள்ள சூரியன் சந்திரன் ஆகியவைகள் நமக்கு கிழக்கே உதித்து மேற்கே மறைவது போன்று தோற்றமளிக்கிறது. எனவே சந்திரன் என்றுமே கிழக்கே உதித்து மேற்கு பக்கம் பார்க்கும் பிறை மறையும் பிறையாகவும் அதே மஃரிப் நேரத்தில் கிழக்கு பக்கம் சந்திரன் இருந்தால் அது உதிக்கும் பிறையாகவும் இருக்கும் என்பதை நாம் சிந்தித்தால் புரிந்து கொள்ளலாம்.

எனவே பார்க்கும் திசையை வைத்து உதிக்கும் பிறையா மறையும் பிறையா என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

## 4. முதல் பிறையை கண்ணால் பார்க்க முடியுமா?

முதல் பிறையை கண்ணால் பார்க்க முடியும். முதல் பிறை என்றால் நாம் என்று மாதத்தை துவங்குகிறோமோ அன்றைய தினத்தில் பார்ப்பது தான் முதல் பிறை. அதாவது நாம் ரமழான் மாதத்தை இன்றைய கிழமையில் துவங்கினால் இன்றைய தினம் நாம் நோன்பை வைத்து விட்டு இன்றைய இரவில் நாம் பார்க்கும் பிறை தான் முதல் பிறை.

**கடந்த மாதங்களின் பிறையை கணக்கிட்டு வந்தால் தான் வரப்போகின்ற மாதத்தின் துவக்கத்தை சரியாக அறிய முடியுமா?**

கண் பார்வையை கொண்டு கணக்கிட்டாலும், அறிவை கொண்டு சிந்தித்து கணக்கிட்டாலும் சென்ற மாதங்களின் கணக்குகளை கணக்கிட்டு ஆய்வு செய்தால் தான் வரப்போகின்ற மாதத்தின் கணக்கை சரியாக அறிய முடியும். அந்த அடிப்படையில் தான் பிறை மன்ஸில்களின் கணக்குகள் கணக்கிடப்படுகின்றது.

**6. ஷவ்வால் மாதத்தின் முதல் நாள் நோன்பு நோற்கலாமா?**

நபி(ஸல்) அவர்கள் இரண்டு பெருநாள் தினங்களிலும் நோன்பு நோற்பதை ஹராம் என கூறியுள்ளார்கள் என்பதை முஸ்லிம்கள் யாரும் மறுக்க மாட்டார்கள்.

அகில உலகத்திற்கும் ஒரே பிறை தான். உலகில் எங்கு பிறை கண்டாலும் அதன் அடிப்படையில் உலக முஸ்லிம்கள் ஒரே நாளில் நோன்பை ஆரம்பித்து ஒரே நாளில் முடித்து ஒரே நாளில் நோன்புப் பெருநாள் கொண்டாடி மகிழ்வதே சரியானதாகும். இதுவே குர்ஆன் -ஹதீதின் ஆதாரபூர்வ ஆவணமாகும். மரியாதைக்குரிய மார்க்க அறிஞர்களான இமாம் மாலிக், இமாம் அஹமத், இமாம் அபூ ஹனீபா, இமாம் இப்னு தைமியா, ஷாஹ்வலியுல்லாஹ் முஹத்தீஸ் தஹ்லவி, மியான் நஸீர், ஹுஸைன், நவாப் ஸித்தீக் ஹஸன்கான் போன்ற சிந்தனையாளர்களின் தீர்ப்பும் இதுவே ஆகும்.

## எத்தனை எத்தனை விளக்கங்கள்

### பிறைகளை வெறுங்கண்ணால் பார்த்து நாள்களைக் கணக்கிடும் எளிமையான முறைகள்

1. சில மாதங்கள் 29 நாள்களும் சில மாதங்கள் 30 நாள்களும் அடங்கிய சந்திரமாதங்கள் மொத்தம் 12ஆகும் (9:36) 29 நாள்களுக்கு குறைவாகவோ, 30 நாள்களுக்குக் கூடுதலாகவோ சந்திர மாதங்கள் வருவதே இல்லை.

2. ஒரு சந்திர மாதத்தில் கொம்புள்ள 7 வளர்பிறைகளும் கொம்புள்ள 7 தேய்பிறைகளும் தென்படும். கொம்புகள் என்றால் பிறையின் இரு முனைகள்

3. மாதத்தின் முதல் நாள் பிறை உலகில் பல பகுதிகளில் சூரியன் மறைந்ததும் மேற்கு அடிவானத்தில் தென்படும். சிறிது நேரத்தில் மறைந்து விடும்.

4 2-ம் நாள் பிறை சூரியன் மறைந்ததும் ஏறக்குறைய 1.15 மணி நேரத்தில் (இஷாவுக்குமுன்) மறைந்து விடும். 3-ம் பிறை இஷாவுக்கு பின்பும் தெரியும்.

5 5-ம் நாள் பிறை, 6-ம் நாள் பிறை மற்றும் 7-ம் நாள் பிறைகளைப் பார்த்தே தேதியைச் சரியாக கணக்கிட முடியும். மாதம் 29-தா அல்லது 30-தா என்பதையும் முன்னரே தீர்மானிக்க முடியும்.

6 6-ம் பிறை, சூரியன் அடைவதற்கு முன்பே ஏறக்குறைய நமது தலைக்கு மேலே நடுவானில் தோன்றி, நடு இரவில் மேற்கே அடைவதைப் பார்க்கலாம்.

7 14 அல்லது 15-ம் நாள் பிறை மாதத்தின் பாதியில் கிழக்கில் (முழு நிலவு) தோன்றுவதையும் மேற்கில் சூரியன் அடைவதையும் பார்க்கலாம். இம்முழுநிலா நடுநிசியில் சரியாக நமது தலைக்கு நேராக மேலே நடுவானில் வருவதையும் பார்க்கலாம்.

8 16-ம் பிறை காலையில் சூரியன் உதித்த பின்பும் காட்சி தரும்.

9 இப்போது தேய்பிறை ஆரம்பமாகிறது. பிறைகள் நாளுக்கு நாள் தேய்ந்தும், பிந்தியும் அடைவதைத் தொடர்ந்து பார்த்து வந்தால் நாள்களைச் சரியாகக் கணக்கிடலாம். இனிமேல் நமது பார்வை அதிகாலை (ஃபஜ்ர்) வேளையிலாகும்.

10. ஒரு சந்திரமாதம் முதல் நாள் பிறை சனிக்கிழமையென்றால்

(a) 2-வது சனிக்கிழமை 8ம் நாள் பிறையும்

3-வது சனிக்கிழமை 15-ம் நாள் பிறையும்

4-வது சனிக்கிழமை 22-ம் நாள் பிறையும் கடைசி சனிக்கிழமை 29ம் பிறையும் ஆகும்.

(b) இவ்வாறு எளிய முறையிலேயே நாள்களை எளிதாக நினைவில் வைக்க முடியும்.

(c) 7 (அல்லது) 8-ம் பிறை பாதிப்பிரகாசமாய் இருக்கும்;

15-ம் பிறை முழு (100%) பிரகாசமாய் இருக்கும்;

22-ம் பிறை 7-ம் பிறை போன்று பிரகாசமாய் இருக்கும்.

11. வளர்பிறை மற்றும் தேய்பிறையும் பயண வேகத்தின் அடிப்படையில் இந்த மாதம் 29-தா அல்லது 30-தா என்பதை மாதம் முடிவதற்கு முன்பே நமக்கு தெரிந்து விடும்.

12. ஒவ்வொரு நாளும் நமது 6 கை விரல்களின் அளவுக்கு (12 டிகிரி) பிறை பயணம் செய்கிறது.

13. 30 நாளுடைய மாதமாயிருந்தால் 5 முதல் 6 விரல்கள் பயண தூரமும், அடர்த்தி குறைவாகவும் பிறை தெரியும்.

14. 29 நாளுடைய மாதமாயிருந்தால் 6 முதல் 7 விரல்கள் பயண தூரமும் அடர்த்தி கூடுதலாகவும் பிறை தெரியும்.

15. 29 நாளுடைய மாதமாயிருந்தால் பூரண நிலவு (15-ம் பிறை) சற்று விரைவில் தோன்றும். மேற்கில் சூரியன் அடைவதும் கிழக்கில் முழுநிலா உதயமாவதும் ஏக காலத்தில் ஏற்படும் நிகழ்வாகும்.

16. 30 நாளுடைய மாதமாயிருந்தால் பூரண நிலா சூரியன் அடைவதற்கு சற்று முன்பே தோன்றிவிடும்.

17. 22-ம் நாள் தேய்பிறை சூரிய உதயத்திற்கு முன் ஏறத்தாழ நடு உச்சியிலும், பாதியைவிட சற்று அதிகமான உருவத்திலும் தென்படும்.

18. 29-ம் நாளுடைய மாதத்தின் 22-ம் நாள் பிறையோ மிகச்சரியாக நடு உச்சியிலும் சரிபாதி அளவிலும் சூரியன் உதிக்கும் முன் காட்சிதரும்.

19. 25-ம் நாள் தேய்பிறை மிக அடர்த்தியாக கிழக்கு அடிவானத்தில் ஃபஜ்ருக்குப்பின் சூரிய உதயத்திற்கு முன் தெரியும்.

20. 26-ம் நாள் தேய்பிறை அதைவிடத் தாழ்வாகத் தெரியும்.

21. 28-ம் பிறை அதைவிடவும் மிகத்தாழ்வாகவும் அடர்த்தி குறைவாகவும் தெரியும்.

22. (a) 29-ம் நாளுடைய மாதமாயிருந்தால் 28ம் பிறை கிழக்கு அடிவானத்தில் ஃபஜரில் மெல்லியதாக சூரிய உதயத்திற்கு முன்(தெரியும்) சூரியன் உதித்த பின் பிறை தெரியாது. இதுவே உர்ஜூனில் கதீம் (36:39) அடுத்த நாள் (29) பிறையைப் பார்க்க முடியாது. இந்த நாள் மாதத்தின் கடைசி நாளாகும்.

23. (b) இவ்வாறே 30 நாளுடைய மாதமாகயிருந்தால் 29-ம் பிறை கிழக்கு அடிவானத்தில் ஃபஜ்ரில் மெல்லியதாக சூரிய உதயத்திற்கு முன்தெரியும். சூரியன் உதித்த பின் பிறை தெரியாது. இதுவே உர்ஜூனில் கதீம் (36:39) அடுத்த நாள் (30) பிறையைப் பார்க்க முடியாது. இந்த நாள் மாதத்தின் கடைசி நாளாகும்.

24. இறுதித் தேய்பிறை (உர்ஜூனில் கதீம்) என்பது இறுதி நாளின் முந்திய நாளாகும்.

25. சந்திர மாதத்தின் கடைசி நாளில் - 29லோ (அல்லது) 30லோ- பிறை கண்ணுக்குத் தெரியாது. (ஃகும்ம 75:9), பூமி-நிலா - சூரியன் இம்மூன்றும் ஒரே நேர்கோட்டில் வரும் நிலை தான் இது. (மேகமூட்டத்தால் மறைவதல்ல) இதைத் தமிழில் அமாவாசை என்றும், ஆங்கிலத்தில் New Moon அல்லது Conjunction என்றும் அரபியில் கபிய, உக்மிய, குப்பிய ஃகும்ம போன்ற சொற்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

26.தேய்பிறையிலிருந்து வளர்பிறையாக மாறும் தருணம் இது. பூமி-நிலா-சூரியன் மூன்றும் நேர்கோட்டில் சில விநாடிகள் மட்டுமே இருப்பதால் அமாவாசையை (New Moon) முதல் பிறை என்று கூறுவதில்லை. இது கடைசி நாளுக்குரிய பிறை என்றுதான் கூறுகிறோம்.

27.இந்த நாளில் நிகழும் (Conjunction) சங்கமம் வருடம் 2 முறை "**காணும்**" நிலை தான் சூரிய கிரகணம் என்பதாகும். சந்திர மாதத்தின் கடைசி நாளில்தான் இது நடக்கும். அதற்கு அடுத்த நாள் மாதத்தின் முதல் நாள் ஆகும்.

நாள் தவறாமல், மாதம் தவறாமல், நேரம் தவறாமல் இறை கட்டளைகளை நிறைவேற்றி அல்லாஹ்வின் பொருத்தத்தை நாட விரும்பும் நன் நம்பிக்கையாளர்கள் பிறை விஷயத்தில் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். இத்தகைய சான்றோர்கள் ஒரு மாத காலம் பிறையைப் பின்பற்றி தினமும் பார்த்து வந்தால் உண்மை தெளிவாகப் புரிந்துவிடும்.

அல்குர்ஆன் திருவசனம் 73:20ஐ ஒருசாரார் தவறாக விளங்கி வைத்துள்ளனர். பகலையும் இரவையும் துல்லியமாக கணக்கிட முடியாது. அப்படியே கணக்கிட்டாலும் அதில் தவறுகள் ஏற்படும். அதை மன்னித்து விடுவதாக அல்லாஹ் கூறுவதால் நாளை கணக்கிட தேவையில்லை. இதுவே அந்தத் தவறான விளக்கம்.

இதில் இரவையும் பகலையும் சரியாக கணக்கிட முடியாது என்றுதான் அல்லாஹ் கூறுகிறானே தவிர சூரியனையும், சந்திரனையும் கணக்கிட முடியாதென்று கூறவில்லை. மாறாக 10:5ல் சந்திரனின் படித்தரங்களை வைத்து பல ஆண்டுகளின் எண்ணிக்கையை கணக்கிட முடியும் என்றே அல்லாஹ் கூறுகிறான். பகல் இரவு மாறி மாறி வருவது பூமியின் சுழற்சியால் ஏற்படுகிறது. சந்திரனின் சுழற்சியால் அல்ல. பூமியின் சுழற்சி ஒவ்வொரு நாளும் 24 மணி நேரம் சரியாகச் சுழல்வதில்லை

(55:5) என்று சொன்ன அல்லாஹ் பூமிக்கு கணக்கு இருப்பதாக தனது நெறிநூலில் எங்கும் கூறவில்லை.

மனித இனத்திற்கு ஆரோக்கியமும், ஆயுளும் அளித்ததன் நோக்கமே தவறுகளிலிருந்து திருந்தி, திருத்தி செயல்படுவதற்குத் தான். ஆகவே கடந்தவைகள் நடந்தவைகளாக இருக்கட்டும். இன்ஷா அல்லாஹ் இனி நடப்பவைகள் நல்லவைகளாகவே இருக்கட்டும்.

அல்லாஹ் நம்மை மனிதனாகப் பிறக்கவைத்து முஸ்லிமாக வாழவைத்து முஸ்லிமாக இறக்க வைப்பது (2:136, 27:91, 3:102) மிகப் பெரும்பாக்கியமே. அதைவிட மிகச் சிறந்த பாக்கியம் முஸ்லிம்களில் முதன்மையான முஸ்லிமாக வாழ்ந்து மறைவதுதான் (6:163, 39:12), One Among the Muslims என்பதை விட Number One Among the Muslims எனப் பறைச் சாற்றுவோமாக. அதாவது முஸ்லிம்களில் நானும் ஒருவன் என்று சொல்வதைவிட நான் முஸ்லிம்களில் முதன்மையானவன் என்றும், பிரகடனம் செய்யத் தகுதியான இறையச்சத்தை வளர்த்துக் கொள்ள அல்லாஹ் பேருதவி செய்தருள்வானாக.

இன்ஷா அல்லாஹ் வரும் சந்திர மாதங்களில் சரியாகக் கணக்கிட்டு ஒரே நாளில் – தேதியில் நமது நற்கருமங்களைச் செய்வோமாக.

**ஹிஜ்ரி 1431 ரமழான்பிறை 01 (11.08.2010) புதன்கிழமை நோன்பு ஆரம்பம்.**

**ஹிஜ்ரி 1431 ரமழான் பிறை 29 (8.09.2010) புதன்கிழமை நோன்பு முடிவு.**

**ஹிஜ்ரி 1431 ஷவ்வால் பிறை 01(09.09.2010) வியாழன் நோன்பு பெருநாள்.**

- HIJRA COMMITEE OF INDIA

**இன்னும் நீங்கள் எல்லோரும் வலுவாக அல்லாஹ்வின் கயிற்றை (அல்குர்ஆன்) பற்றிப்பபிடித்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிரிந்து விடாதீர்கள். (3:103)**


## ஜமாஅத் அல் முஸ்லிமீன்

**கோட்டார், நாகர்கோவில்**

தொடர்புக்கு : 9842386224, 9443103500, 9600223622


**சூரியனும் சந்திரனும் கணக்கின்படி இருக்கின்றன. (55:5)**


வெளியீடு : 13 ஹி. 23.08.1431

கி. 03.08.2010

# ரமழான், ஷவ்வால், துல்ஹஜ் ஆரம்பம்

| | | | |
|---|---|---|---|
| ஹிஜ்ரி 1431 | ரமழான் மாத ஆரம்பம் | 11.08.2010 | புதன்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 09.09.2010 | வியாழக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 07.11.2010 | ஞாயிற்றுக்கிழமை |
| ஹிஜ்ரி 1432 | ரமழான் மாத ஆரம்பம் | 31.07.2011 | ஞாயிற்றுக்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 30.08.2011 | செவ்வாய்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 27.10.2011 | வியாழக்கிழமை |
| ஹிஜ்ரி 1433 | ரமழான் மாத ஆரம்பம் | 20.07.2012 | வெள்ளிக்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 18.08.2012 | சனிக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 16.10.2012 | செவ்வாய்கிழமை |
| ஹிஜ்ரி 1434 | ரமழான் மாத ஆரம்பம் | 09.07.2013 | செவ்வாய்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 07.08.2013 | புதன்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 06.10.2013 | ஞாயிற்றுக்கிழமை |
| ஹிஜ்ரி 1435 | ரமழான் மாத ஆரம்பம் | 28.06.2014 | சனிக்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 27.07.2014 | ஞாயிற்றுக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 25.09.2014 | வியாழக்கிழமை |
| ஹிஜ்ரி 1436 | ரமழான் மாத ஆரம்பம் | 17.06.2015 | புதன்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 17.07.2015 | வெள்ளிக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 14.09.2015 | திங்கட்கிழமை |
| ஹிஜ்ரி 1437 | ரமழான் மாத ஆரம்பம் | 06.06.2016 | திங்கட்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 05.07.2016 | செவ்வாய்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 02.09.2016 | வெள்ளிக்கிழமை |
| ஹிஜ்ரி 1438 | ரமழான் மாத ஆரம்பம் | 26.05.2017 | வெள்ளிக்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 25.06.2017 | ஞாயிற்றுக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 22.08.2017 | செவ்வாய்கிழமை |
| ஹிஜ்ரி 1439 | ரமழான் மாத ஆரம்பம் | 16.05.2018 | புதன்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 14.06.2018 | வியாழக்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 12.08.2018 | ஞாயிற்றுக்கிழமை |
| ஹிஜ்ரி 1440 | ரமழான் மாத ஆரம்பம் | 05.05.2019 | ஞாயிற்றுக்கிழமை |
| | ஷவ்வால் மாத ஆரம்பம் | 04.06.2019 | செவ்வாய்க்கிழமை |
| | துல்ஹஜ் மாத ஆரம்பம் | 02.08.2019 | வெள்ளிக்கிழமை |